# வயிறு

## தேசிகரும் பூசாரியும்

"என்ன நல்லுப் பூ சாரி ! அத்தி பூத்தாப்போல.'

"சும்மாத்தான்" என்று நல்லுப்பூசாரி தேசிகர் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தார். சும்மாத்தான் என்று சொன்னரே ஒழியச் சும்மா இருக்கவில்லை. இடது கையை விரித்து நீட்டினர். தேசிகர் தாமரை இலைத் தண்ணீரைப் போலும் ஓட்டுடன் ஒட்டியும் ஒட்டாமலும் வாழும் புளியம் பழத்தைப் போலும் வாழ்வை நடத்துவதாகச் சொல்லி வருபவர். அவர் நல்லுப்பூசாரி கையில் போட்ட சிமிட்டாப் பொடி அவருடைய கொள்கையை விளக்குவ தாகவே விழுந்தது. பூசாரி மட்டும் சளைத்தவரா ? பிடாரியை முதலாக வைத்துக் கொண்டு வயிற்று வியாபாரத்தை நடத்துகிறவர்தாமே ? வந்த காரியம் கெட்டு விடக்கூடாதல்லவா ? கவுட்டுத்தனத்துடன், பொடி அதிகம் விழுந்துவிட்டது போல், இடது கையில் இருந்ததை அப்படியே வெகு நேரம் மூக்கால் உறிஞ்சி விட்டுப் பூசாரி நன்ருக உட்கார்ந்து கொண்டார். பூசாரி வந்த காரியம் தேசிகருக்கு நன்ருகத் தெரியும். ஆகையால் இரண்டொரு நிமிஷம் ஒருவரும் பேசவில்லை. எதிரிகளோ அல்லது அந்தரங்கத் தோழர்களோ அல்லது வேறு யாரும் பேசாமல் எதிரும் புதிருமாக வெகு நேரம் உட்கார்ந்திருக்க முடியாது.

மௌனத்தைத் தாங்கமாட்டாமல் தேசிகரே ஆரம்பித்து விட்டார்.

"என்னவோ கேள்விப்பட்டேனே, மெய்தாஹ!"

"ஆமாம் ; அதுதான் இங்கே வந்தேன். கைக்கோளன் தூக்குப் போட்டுக்க இடம் பிடிச்சான் பாருங்களேன் சண்டாளப் பயல் ! இப்போ கோயிலே என்ன பண்றது ? பூசை செய்யலாமா ? கோயிலே மூடிட வேணுமா ? ஆகமத்தைப் பாத்து நீங்கதான் சொல்லணும். ஏதேனும் சாந்தி கீந்தி இருந்தா, கழிச்சுப்புடுவோம்."

'நானும் கேள்விப்பட்டேன். அவன் ஏன் தூக்குப் போட்டுக்கிட்டான்னு தெரியல்லியா?...ரொம்ப நல்லவனுச்சே !..."

"தெரியல்லீங்களே, பிடாரி பாதத்திலே, ஒரு கடுதாசு மடிச்சுக் கிடந்திச்சு. போலீஸ்காரங்க அதை எடுத்துக் கிட்டுப் போறாங்க. அதிலே எதுனச்சும் எளுதி இருந்தாத் தான் ?"

"என்ன எளுதி இருந்தான் ?"

"களவாணிப் பயலுக. யாருக்கேனும் படிச்சுக் காட்டிருத்தானே ? அதை மூடுமந்திரமா வச்சுக்கிட்டானுங்க, அவங்களுக்கும் பொழப்பிருக்கல்ல...கடுதாசு எப்படி இருந்தா நமக்கென்ன ? என் பொழப்புக்கு ஒலே வச்சுட்டான் பயல். நீங்க சாத்திரத்தைப் பர்த்து—"

தேசிகர் யோசனையில் ஆழ்ந்துவிட்டார். இந்தப் பூசாரிக்கு நாலு காசு கிடைத்துக் கொண்டிருந்த வரையில் இவரை லட்சியம் செய்வதில்லை. இவர் சுத்த சைவராய் இருந்தால் என்ன ? ஆவணி ஞாயிற்றுக் கிழமைகளில் அள்ளிக் கட்டிக்கொண்டு போகும் தேங்காய் மூடிகளில் நாலைத் தேசிகர் வீட்டில் போட்டுவிட்டுப் போகக் கூடாதா ? ஓதுவாரிடத்தில் தம்பிடி மரியாதைக்காவது

வைக்க வேண்டாம்! இப்பொழுது இவருடைய தயவு வேண்டி இருக்கிறது! இதை எல்லாம் பற்றித்தான் அவர் யோசித்தார். இதை எல்லாம் நினைத்துக் கொண்டேதான் பேசினர்.

"ஆகமத்தையும் சாத்திரத்தையும் எதுக்குப் பார்க்கணும்? குட்டிச்சுவரிலே முட்டிக்க வெள்ளெழுத்தா இம்பாங்க, அதுமாதிரி பேசறே! தூக்குப் போட்டுகிட்ட வீட்டை என்ன பண்ணறோம்? பூட்டிப் போடறோம். அதைத்தான் கோவிலுக்கும் செய்யணும்."

"அப்படிங்களா? இருக்காது. நல்லாப் புஸ்தகத்தைப் பார்த்துச் சொல்லுங்க. இல்லாட்டி நானும் தூக்குப் போட்டுக்கிடவேண்டியதுதான். நான் இம்மாம் பிள்ளையிலே இருந்து பூசாரி! வேறெ என்ன தொழில் தெரியும்?"

"பிசாசு ஓட்டுவியே."

"பிடாரி இல்லேன்னு அப்புறம் எந்தப் பிசாசு என் கிட்டே வரும். இதோடெ என் பொழப்பே போயிடும்.... ஓலே எடுத்துப் பாருங்க. வீடும் கோவிலும் ஒண்ணுகுங்களா? பலி வாங்க இன்னு பொறந்த இடமாச்சே பிடாரிகோவில்! அதிலே ஒத்தன் வந்து தன்னையே காவு குடுத்துக்கிட்டா, தோசம் எப்படி வரும்? காவுன்ன ஒடனே நெனப்பு வருது. நீங்க சைவம் நான் அப்படி இல்லே. ரெண்டு பேரும் ஒண்ணு ஆவோங்களா? அந்த மாதிரிதான். இதனலே தான் உங்க வீட்டுக்குப் பூ, தேங்கா மூடிகூட எதுவும் குடுக்க எனக்குப் பயம்!"

தேசிகருக்குச் சுருக்கென்று தைத்தது.

"அது சரிதான். நாங்க நல்ல சைவந்தான்......இருந்தாலும் இந்த விசயமெல்லாம் நாமாச் சொல்றதுக்கு இல்லே. ஆகமம் சொன்னு அப்பீல் இல்லே!"

"அதைத்தான் பாருங்க. கோவில் விளக்கோடே எங்க ஊட்டுதையும் அவிச்சுடுதாங்க!"

"அட பயித்தியமே! சாத்திரத்தைப் பாக்கறேன்."

## ஜாமீன்தார்

நல்ல வேளையாய்ப் போச்சு! இருந்தபோதும் நல்லவன் தான். செத்தும் நல்லவன் தான். தூக்குப் போட்டுக் கிடாமே ஓடிப்போயிருந்தா என் ஜாமீன் கதி என்ன? ஒண்ணும் தெரியாதவனே ஜெயில்லே அடைச்சாங்களே இன்னு ஜாமீன் கொடுத்தேன். அவன் பொஞ்சாதி என்னு துடிதுடிச்சாள்! பச்சை ஜலத்தை தவிரப் பல்லிலே ஊத்தாதவன் இன்று பத்தாயிரம் தரம் சத்தியம் பண்ணிக் கூட அவுங்களுக்கு நம்பிக்கை பொறக்கல்லியே...அப்புறம் எப்படியோ ஜாமீனே ஒப்புக்கிண்டாங்க.

இவன் ஏன் தூக்குப் போட்டுக்கிட்டான்? அதுதான் தெரியல்லே. பெண்டாட்டி புருஷன் சண்டை இவங்களுக் குள்ளார கிடையாது. நானுவது அந்த பொம்பிள்ளேமேலே ஒரு கண்ணு இருந்திருப்பேன். அந்தப் பொம்பிள்ளே மட்டும் இரும்புத்துண்டுக் கணக்காக இருக்குது. இந்தத் தெருவிலே இவுங்களேப்போல, நல்லவங்க யாருமில்லே. ஏழைங்கதான் ஆனு ஒரு பெசகும் சொல்ல முடியாது. அவள் நூல் இழைச்சா இரண்டு காசு. இவன் தறி நெஞ்சால் இரண்டு காசு. இதை வைச்சுக்கிட்டு மானமா நாளேக் கடத்திகிட்டு இருந்தாங்க. இப்போ இவனே என்ன சனியன் பிடிச்சதோ! அந்தப் பொம்பிள்ளே படற வாதனேயைத் தாளாமெ மீட்டுகிட்டு வந்தேன். அந்தப் பொம்பிள்ளே நெஜத்தைச் சொல்லிச்சு. தான் செஞ்சேன் இன்னு போலீசுக்காரன் கிட்டச் சொல்லு இன்னுச் சொல்லிச்சு. அவனுக்குத் தைரியம்னுகூடச் சொன்னேனே! என்ன எழவோ தூக்குப் போட்டுக்கிட்டான்! போயிட்டான்! என்னே வம்பிலே மாட்டாமப்போனுனே, அதுக்குத்தான் இப்போ கும்பிடு போடணும்.

## அடுத்த வீட்டுக்காரி

நல்லது செய்யப்போய் ஆபத்தால்ல முடிஞ்சு போயிட்டுது? கைத்தறித் தொழில் உக்காந்து போனதும் இந்தத் தெருவும் உக்காந்து போச்சு. தெருவிலே அடுப்பு பத்தவைக்கிற வீடு அஞ்சுகூட இருக்காது. அடுத்த ஊட்டுக்காரி நெருப்பிலே விழுந்த புழு மாதிரி துடிச்சிட்டுக் கிடந்தாள். சோறில்லே தண்ணியில்லே. ஆவ புருசன் ஒரு மண்டு. தொழில் இல்லென்னு ஏதானும் செய்யக்கூடாது? சொறி நாய் சாம்பலிலே படுத்துக் கிடக்கிறப்போல திண்ணையிலே சும்மாப் படுத்துக் கிடந்தான். அந்தப் பொம்பிள்ளை என்ன செய்யும்? ஒருநாள் ரெண்டு நாள் பார்த்தாள். மூணுநாள் என்கிட்டவந்து அழுது புலம்பினாள். அப்புறம் நான் செஞ்ச உத்தியை அவளுக்கும் சொல்லி வைச்சேன். தினம் கையிலே நாலு காசு அவளுக்கும் பிரண்டுது. ஒரு மாசமா இந்த உத்திதான் அடுத்த ஊட்டுக்காரங்களுக்குச் சோறு போட்டுது. இது சனீஸ்பர பகவானுக்குத் தாங்கல்லே. அடுத்த வீட்டுக்காரனைப் பிடிச்சுக்கிட்டுது. நல்லவேளை. எங்ககிட்டே வரல்லியே, அது வரையில் புண்ணியந்தான்.

## பெண்சாதி

அட விதியே! விதியே! நான் ஒண்ணு நினைக்க அது ஒண்ணு ஆயிடுச்சு! நூலும் கெடக்கல்லே. கைத்தறியிலே பொழப்பும் இல்லே. எத்தினை நாள் பட்டினி கிடக்கிறது? அதுக்கு வேறெ ஒரு தொழிலும் தெரியாது. மரவட்டை மாதிரி சுருட்டிகிட்டுத் திண்ணையிலே படுத்துக்கிட்டுது. எனக்குத்தான் என்ன தொழில் தெரியும்? பிசாசுக்குப் புளியமரம் தெரியற மாதிரி எனக்கும் நெசவுத் தொழில் தெரியும். அவரு படுத்துக் கிடந்தா நானும் படுத்துக்கிடக்க முடியுமா? முடியல்லே. அடுத்த ஊட்டுக்காரி முட்டையும் கிட்டையுமாத் திங்கறது எனக்குப் பொறுமையா இருந்

திச்சு. அவுங்களுக்கும் இதே தொழில்தானே? எங்கே இருந்து பணம் கிடைக்குது? அடுத்த வீட்டுக்காரியை மெது வாய்க் கேட்டேன். ஒரு தந்தரம் சொன்னாள். 'புட்டியிலே கள்ளு தாரேன். ரகசியமாக் கூடையிலே வச்சு வித்துப்புடு. எங்கிட்ட இவ்வளவு குடுத்துடு. மேலே எவ்வளவு வச்சு வித்தாலும் நீ எடுத்துக்க' இன்னாள். கடவுள் வழி காட்டினார் இன்னு நெனைச்சுக்கிட்டேன். ஒரு மாசமா அரை வயிறு வளத்துப்புட்டோம்.

இப்போ இந்த இடி விழுந்துட்டுது. நாலு நாளைக்கு முன்னே திடுதிப்பின்னு போலீஸ்காரன் என் கூடையைச் சோதிச்சான். எந்தப் படுபாவி அவங்ககிட்ட வத்தி வச்சானோ! பிடுச்சுக்கிட்டான். என்னை அழைச்சு வீட்டை வேறெ சோதனை போட்டான். ரெண்டு புட்டி அம்புட்டுது. அவ்வளவுதான். திண்ணையிலே படுத்துக் கிடந்தவரை இழுத்துக்கிட்டுப் போயிட்டான். ரெண்டு நாளா ஜெயில்லே கிடந்தாரு...பாவம் இவருக்கு தான் பண்ணின வியாபாரம் தெரியவே தெரியாது. நான் எப்படிச் சம்பாதிச்சு இவருக்குச்சோறு போடறேன் இன்னு ஒரு வார்த்தை கூடக் கேக்கல்லே. அவரைப் போய்ச் சனியன் பிடிச்சிட்டுது.

அவரைப் பிடிச்ச சனியன் அடுத்தவீட்டுக்காரங்களை யல்ல பிடிக்கணும்! அதைக் காணும். போலீஸ்காரங்க அந்த ஊட்டுப்பக்கம் போகவே இல்லே. வளர்த்த கிடா மாரிலே பாயறாப்போல நான் மெய்யைச் சொல்லலாமா? எம்புருஷனுக்கும் இதுக்கும் சம்பந்தமில்லேன்னு சொன்னேன். போலீஸ்காரன் என்னைப் பிடிச்சுக் கீழே தள்ளி அவரை இழுத்துக்கிட்டுப்போயிட்டான். அப்புறம் தெரு நாட்டாமைக்காரர்கிட்டே போய்க் கையிலே காலிலே விழுந்தேன். அவரைக் கண்டாக்கூட எனக்குப் பிடிக்காது. அவர் ஒரு மாதிரி! வேறெ கதி? மெய்யைச் சொல்லி புருஷனை மீட்கச் சொன்னேன். அவரும் சரின்னுட்டு ஜாமீன் கொடுத்தாரே! சுருட்டிக்கிட்டுப் படுத்துக்கிடக்கறவர் இவரல்ல, இவ்வளவு பெரிய காரியத்தைச் செய்துட்

டார்! என்ன துணிச்சல்! என்னத்தை நெனேச்சுக்கிட்டு இப்படி செஞ்சிட்டாரு? நான் ஒரு மாதிரி ஆயிட்டேன்னு நெனச்சுட்டாரா?

போலீஸ் இன்ஸ்பெக்டர்

எழுத்தைப்பாரு எழுத்தை! பேச்சக் காலும் பேச்சக் கையுமா? எழுதி இருக்கிறதோ அதுக்குமேலே, சாமியைப் பள்ளிக்கூடத்துப் பிள்ளேன்னு மடையன் நெனச்சுட்டான். கேட்டால் பதில் சொல்லுமா என்ன சாமி!

''பிடாரி ஆத்தா! வெள்ளிக்கண்மலர் வச்சுக்கிட்டிருக்கியே? கண் தெரியல்லியா? உண்மை தெரியல்லியா? தெரியாதவங்களுக்குச் சொல்லக்கூடாதா? நான் கண்ணுலே இந்தப் புட்டியை எப்பனுச்சும் பாத்திருப்பேனு? நானு திருட்டுக் கள்ளு வித்தேன்? இந்தப் போலீஸ்காரன் சொல்றுனே! நாளேக்குள்ளார அவனுக்குச் சொல்லாட்டி பாத்துக்கோ, நீ சாமீ இல்லே. நானும் இல்லே. சம்பாதிக்க வக்கில்லே. திருடத் தெரியாது. சூதுவாது தெரியாது. சுருட்டிக்கிட்டுத்தானே படுத்துக்கிடந்தேன்? அவ என்ன செஞ்சாளோ என்னவோ உனக்குத்தான் தெரியும். ஒரு வேளே சோறு போட்டுக்கிட்டு வந்தாள். ஏதுன்னு கேட்டிருப்பேனு?...... போலீஸ்காரன் என்னேத் தெருவோட இழுத்துக்கிட்டுப் போனபோது எத்தினி பேர் சிரிச்சாங்க! நானு மாட்டிக்கினேன்? இல்லே நீயா? நாளேக்கு சாயங்காலம் வரையிலுந்தான் கெடு. அப்புறம் பாத்துக்கோ. நீ சாமி இல்லே. நானும் இருக்க மாட்டேன்.''

நல்லா எழுதிச் சாமி காலடியிலே போட்டான்! சாமி என்ன தபாலாபீஸா, மேலதிகாரியா? நல்ல பித்துக்குளி... ஆனு ஒண்ணு. இவனுக்கும் இதுக்கும் சம்பந்தம் இல்லே போல இருக்குது...சரி, அதுக்காக நான் என்ன பண்றது? கேஸ் பிடிக்கணுமே! ருசு அம்பிட்டுப் போச்சு. இவனே விட்டுட்டு இவன் பொஞ்சாதியைப் பிடிச்சாமாத்திரம்? எல்லாம் ஒண்ணுதான். எப்படி இருந்தால் என்ன? இந்தக் கேஸ்கூடப் பிடிக்காட்டி அவனவன் பொழைக்க வேணுமா?